# குழந்தைகள் களிக்கூடம்

இயற்றியவர்
ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா
1981



# குழந்தைகள் களிக்கூடம்

**விளக்கம் — தக்க பருவம் — யார் புகட்டுகிறார் ? — இயற்கையின் திட்டம் — மனப்பாங்கு — வாழ்க்கைமுறை — விதவிதமான விளையாட்டுக்கள் — நிலைத்த நலன்.**

## விளக்கம்

சின்னஞ்சிறு குழந்தைகள் தெய்விகம் வாய்க்கப்பெற்றவர்கள். ஏனென்றால் உலகப்பற்று ஏதும் அவர்கள் உள்ளத்தை இன்னும் மலினப்படுத்தவில்லை. தங்களுக்குச் சொந்தமாயுள்ள தூய்மையில் அவர்கள் தோய்ந்திருக்கின்றனர். உடலைத் தான் என்று உணர்வது வீழ்ச்சிக்கு முதற்படியாகும். அந்த உணர்ச்சிக்கு இடந்தராது குழந்தைகளை வளர்க்கவேண்டும். களியாட்டம் ஒன்றே அதற்கு உற்ற உபாயமாகும். விளையாட்டுப் பருவத்தை விளையாட்டுக்கு என்றே பயன்படுத்த வேண்டும். கவலையைச் சிறிது நேரமாவது மறந்திருக்க முதியோர்கள் விளையாடுகின்றனர். சிறார்களுக்கோ கவலையொன்றுமில்லை. அவர்கள் ஆனந்தத்தில் ஊறியிருக்கின்றனர். ஆனந்தமும் தெய்விகமும் ஒன்றே. குழந்தைகளிடத்து ஆனந்தம் ஓங்குமளவு அவர்கள் மேன்மையுறுகின்றனர். ஆனந்தமும் விளையாட்டுப் பருவமும் ஒன்று. தங்குதடையற்ற ஆனந்தத்தைக் குழந்தைகளிடம் வளர்க்க வேண்டும். அப்படிச் செய்வது ஒப்பற்ற சேவையாகும். ஆனந்தத்தில் ஊறி வளர்கிற சிறுவர்கள் வாழ்க்கையை நன்கு துவக்கியவர்கள் ஆகின்றனர்.

இக்காலத்து மாந்தர் பொருள் ஈட்டுதலிலேயே காலம் முழுதையும் கழிக்கின்றனர். வேறு எதைப்பற்றியும் நினைக்க அவர்களுக்கு நேரமில்லை. அப்படி எண்ணுகிற எண்ணத்

திலும் செய்கிற செயலிலும் அவர்கள் பிழைபண்ணுகின்றனர். ஏனென்றால்

**தம்பொருள் என்ப தம்மக்கள் அவர்பொருள்**
**தம்தம் வினையான் வரும்.**

ஈட்டுகிற பொருள் கைவசம் இருக்கிறபொழுது தம் சொத்து ஆகிறது. கை மாறியபின் அது பிறர் சொத்து ஆகிறது. சம்பாதிக்கிற செல்வம் சதா கைம்மாறிச் சென்றுகொண்டே இருக்கிறது. ஆனால் மகப்பேறு என்னும் செல்வம் யாண்டும் தமக்கே உரியது. சுவீகாரம் செய்து கொடுத்தாலும் தம் மகன் பிறர் மகன் ஆகான். அவர் அவர் வினைக்கு ஒப்ப நன்மக்கள் அல்லது புன்மக்கள் வாய்க்கின்றனர். வாய்க்கும் மகப்பேறு எத்தகையதாயினும் அதை நல்ல முறையில் வளர்க்கப் பெற்றோர் அனைவரும் கடமைப்பட்டிருக்கிறார்கள். தம் செல்வங்களைச் செவ்வனே வளர்ப்பது சிவபூஜைக்கு ஒப்பானது. பெற்றோர்க்கு உற்ற முதல் கடமை அது. எக்காரணத்தை முன்னிட்டும் அந்த அரும் பணியினின்று அவர்கள் பிசகலாகாது.

தேவாலயம் கட்டுதற்குப் பொருத்தமான நல்ல இடம் தேடியெடுக்கப்படுகிறது. அங்ஙனம் குழந்தைகளின் களிக்கூடம் நலன்கள் அனைத்தும் நிரம்பப் பெற்றதாயிருக்க வேண்டும். காற்றோட்டமும் வெளிச்சமும் வாய்க்கப்பெற்ற சிறுவீடு ஒன்று முதல் தேவையாகிறது. கடும்வெயில் அடிக்கிறபொழுதும் மழை பெய்கிறபொழுதும் அவ்வீடு நன்கு பயன்படுகிறது. மற்ற நேரங்களில் சிறுவர்கள் மரத்தடியிலும் விளையாட்டு மேடைகளிலும் களித்திருப்பார்கள். மர நிழலோடு கூடிய திறந்த இடம் விளையாட்டுக்கு முற்றிலும் பொருத்தமானது. சுற்றுச் சுவர் எடுத்து நல்ல பாதுகாப்பில் அது அமைந்திருக்கவேண்டும். நீரினுள் மீன் மகிழ்வுற்று

இருக்கிறது. வானத்தில் பறவை இனிது பறக்கிறது. விலங்கு இனம் வனத்தில் வாழ்வாங்கு வாழ்கிறது. அதே பாங்கில் களிக்கூடம் மானுடவடிவில் மூன்றுவருஷத்துக்கு முன்புவந்துள்ள சிறியோர்க்கு முற்றிலும் ஒத்ததாயிருக்கவேண்டும். இது ஒரு தனி மனிதனுடைய முயற்சியின் விளைவாக இருக்கலாகாது. சமுதாயம் முழுதும் இதில் ஊக்கம் காட்டவேண்டும். மக்களின் முதற்கடமை தங்கள் மகவுகளை இனிதுவளரச் செய்வதாம். அதற்கேற்ற இடத்தை அமைப்பது அனைவருடைய பொறுப்பு ஆகிறது.

நல்ல களிக்கூடம் ஒன்றில் முதியவன் ஒருவன் பொறுப்பில் இரண்டொரு பசுக்கள், அவைகளின் கன்றுகள், இரண்டு மூன்று ஆடுகள், அவைகளின் குட்டிகள், ஒரு நாய் ஆகிய விலங்குகள் வளர்க்கப்படவேண்டும். சில புருக்கள், இரண்டு மூன்று கோழிகள், இரண்டு வாத்துகள் ஆகிய பறவைகளும் ஆங்கு வளர்க்கப்படவேண்டும். களிக்கூடத்துக் கிணற்றிலே' அல்லது கேணியிலே மீன்கள் வாழ்ந்துவர வேண்டும். களிக்கூடத்தில் விளையாட வரும் சிறுவர்கள் இத்தனைவித உயிர்வகைகளோடு நல்லிணக்கம் வைத்துப் பழகுவது அவசியம். உயிர்களை உயிர்கள் நேசிப்பது, அவைகளின் வாழ்வுக்குத் துணைபுரிவது சிறுவர்களுக்கு விளையாட்டாக இருக்கவேண்டும். அது அவர்களை நல்ல பண்பில் கொண்டு சேர்க்கும்.

விளையாட்டுக்கு ஏதுவான உபகரணங்கள் யாவும் களிக்கூடத்தில் இடம் பெறுதல் அவசியமாகிறது. ஊஞ்சல், சறுக்கு, உந்துகம்பம், ராட்டினம் ஆகியவைகள் இனிது அமைக்கப்பெறுகின்றன. பந்து, துடுப்பு, சிலம்பம், சதங்கை, கோல், தம்பட்டம் ஆகிய விளையாட்டுக் கருவிகள் ஆங்கு இடம் பெறுகின்றன. அக்கூடத்துக்குள் வருகிறகுழந்தைகள்

பெருமகிழ்வடைகின்றனர். ஏனென்றால் அவர்கள் இன்புற்றிருப்பதற்கான வசதிகள் யாவும் ஆங்கு அமைக்கப் பெற்றிருக்கின்றன. அதைச் சிறுவர் சொர்க்கம் எனலாம். அவரவர் வீட்டினின்று அவர்கள் ஆங்கு விரைந்தோடி வருகின்றனர். பின்பு மாலையில் வீட்டுக்குத் திரும்பிப்போக அவர்களுக்கு மனம் வருவதில்லை. அங்ஙனம் குழந்தைகளுக்குக் கவர்ச்சிகரமாக அமைக்கப் பெற்றுள்ள இடம் களிக்கூடம் எனப்படுகிறது.

## தக்க பருவம்

தனக்கு மகவாக வாய்த்த சிசுவைத் தாய் பேணிவருகிறாள். அது அவளுடைய உரிமையும் பொறுப்பும் ஆகும். பெற்றவளால் வளர்க்கப் பெறுவது சிசுவுக்குத் தெய்விகப் பேறு ஆகும். மூன்று வருஷகாலம் தாயின் பராமரிப்பில் இருப்பது முற்றிலும் அவசியம். பாலூட்டுவதும், பணிவிடை பண்ணுவதும், போதிப்பதும் அவளுடைய தனிப் பொறுப்பாகும். மூன்று வயது பூர்த்தியாவதற்குச் சற்று முன்பு தாய் தன் குழந்தையைக் களிக்கூடத்துக்கு அழைத்துச் செல்கிறாள். அங்கு நடைபெறுவதை அவள் தன் சேய்க்குக் காண்பிக்கிறாள். இப்படி இரண்டு மூன்று மாதங்கள் கழிகின்றன. அதற்கிடையில் குழந்தைக்குக் களிக்கூடத்தில் பற்றுதல் உண்டாகிறது. பின்புஅது ஆங்குஅனுப்பிவைக்கப்படுகிறது. எக்குழந்தையும் பலவந்தமாகத் தாயிடமிருந்து பிரித்து வைக்கப்படலாகாது. தாய்ப்பற்றானது தானாகவே களிக்கூடப் பற்றாகப் பரிணமிக்க வேண்டும்.

தாயின் பொறுப்பைக் களிக்கூட ஆசிரியை எடுத்துக் கொள்கிறாள். அவளுடைய கடமை தாயின் கடமையைவிடப் பரந்தது ஆகும். பெற்றவள் ஒரு குழந்தையை மட்டும் பரா

மரிக்கிறுள். மற்றவள் இருபது குழந்தைகள் மீது கவனம் செலுத்துகிறுள். தனித் தனியாய்க் கவனிப்பதும் தொகுத்துக் கவனிப்பதும் அவளுடைய செயலாகும். இனிய மனப்பான்மை ஆசிரியையிடத்து அமைந்திருத்தல் வேண்டும். தொந்தரவுகளை முன்னிட்டு அவள் சலிப்படையலாகாது. பொறுமைக்கும் தளராத ஊக்கத்துக்கும் அவள் இருப்பிடமாவாள். குழந்தைகளுக்கு மகிழ்வூட்டுவது அவளுடைய முதல் கடமையாகும். ஓடி விளையாடும்படி அவர்களை ஊக்குவிப்பது அடுத்த கடமையாகும். கவனம் மிகப்படைத்துள்ள அன்னவள் எக்குழந்தைக்கு எப்பொழுது எத்தகைய ஆதரிப்பு அவசியமோ அதை அப்பொழுதே கொடுத்துதவுகிறுள். இதுவே களிக்கூட ஆசிரியையிடத்துள்ள தனித்தகைமையாகும்.

குழந்தைகள் எல்லாரும் ஒரு விதமான எளிய சீர் உடை அணிந்திருக்க வேண்டும். அவ்வுடைகளைத் துவைப்பதில் சிரமம் இருக்கலாகாது. சொகுசும் ஆடம்பரமும் நிறைந்த உடைகள் அனுமதிக்கப்படமாட்டா. பணக்காரன் ஏழை என்ற வேற்றுமை களிக்கூடத்தில் இடம் பெறலாகாது. உஷ்ணப் பிரதேசமாகிய நம்நாட்டுக்கு மேல்நாடுகளில் போன்று பளுவு நிறைந்த ஏராளமான உடைகளுக்குத் தேவையில்லை. மேனி மட்டும் மூடப்பெற்றதாகவும் கை கால் மூடப்படாமலும் இருக்கவேண்டும். ஏதோ சில வேளைகளில் மேனி முழுதிலும் சூரிய வெளிச்சம் படும்படி செய்வது மிக நன்று. அதனுல் உடல் வளம் பெறுகிறது. வீட்டிலும் களிக்கூடத்திலும் பாதரட்சை அணியலாகாது. பாதையிலும் பொது இடங்களிலும் அவைகளைப் பயன்படுத்தலாம்.

களிக்கூடம் எத்தனை மணிநேரம் நடைபெறுவது என்பது கேள்வி. அந்தந்த இடங்களின் தேவைக்கு ஏற்றவாறு

கால அளவை நீளவும் குறுகவும் செய்கிறது. குறைந்த பட்சம் மூன்று மணிநேரமும் நீண்டபட்சம் ஒன்பது மணி நேரமும் தேவைப்படும். வேலைக்குப் போகும் பெற்றோர் களுக்குத் தங்கள் குழந்தைகளை நெடுநேரம் களிக்கூடத்தில் விட்டு வைப்பது பேருதவியாயிருக்கும். நெடுநேரம் தங்கி யிருக்கும் சிறுவர்களுக்கு உணவு படைப்பது அவசியமா கிறது. களிக்கூடத்தில் வழங்கப்படும் உணவு எல்லார்க்கும் ஒரே விதமாயிருக்கவேண்டும். குழந்தைகள் தங்களுக்குள் ளேயே பரிமாறிக்கொள்ளும் பழக்கத்தை அதிகப்படுத்த வேண்டும். அதனால் சுயநலப்பற்று அகலுகிறது. சேவை மனப்பான்மை அங்ஙனம் ஓங்குகிறது. நண்பகல் உண்டிக் குப் பிறகு ஒரு மணிநேரம் அமைதி நிலவுதல் அவசியமா கிறது. சிறாரை அப்பொழுது கண்வளரச் செய்வதும் உசிதம். தீவிர நடமாட்டமும் பேச்சற்ற ஓய்வும் நல்ல பயிற்சிக்கு முகாமைகளாகின்றன.

சின்னஞ்சிறார் யாண்டும் இன்புற்றிருக்க வேண்டும். குதூகலத்தில் அவர்கள் ததும்பிக் கொண்டிருக்க வேண்டும். அதுவே களிக்கூடத்தின் குறிக்கோள் ஆகும். துன்பத்துக் கும் முகவாட்டத்துக்கும் ஆங்கு இடமில்லை. அத்தகைய மனநோய் அறவே தவிர்க்கப்படுகிறது. குதியாட்டமும், சுறுசுறுப்பும், சிரிப்பும் உள்ளத்தினுள் புதைந்து கிடக்கும் பேராற்றல்களை முன்னணிக்குக் கொண்டு வருகின்றன. குழந்தைகளின் நான்காவது வயதும் ஐந்தாவது வயதும் ஆனந்தத்திலேயே ஊறியிருக்க வேண்டும். முதியோர் சிறார்க்குச் செய்யும் சீரிய சேவை அதுவேயாம்.

குழந்தைகளின் களியாட்டம் வீண் பொழுதுபோக்கு ஆகாது. விளையாட்டின் வாயிலாக அவர்கள் அரிய பெரிய விஷயங்களைக் கற்று வருகின்றனர். பாடம் புகட்டுதல்

என்னும் பேச்சு ஆங்கு எழலாகாது. பொருந்திய சூழ்நிலையானது மறைமுகமாகச் சிறுர்க்குப் பாடம்புகட்டி வருகிறது. ஓதாது உணர்கிற அறிவே சாலச்சிறந்தது. களிக்கூடம் கொடுத்துதவுகிற பெரு வாய்ப்பு அதுவாம்.

## யார் புகட்டுகிறுர் ?

அடி படாதபிள்ளை படியாது என்பது பொருளற்ற பழைய பேச்சு. அடித்துத் துன்புறுத்தியதற்கு ஏற்ற வாறும், பயமுறுத்திப் பணிய வைத்ததற்கு ஏற்றவாறும் சிறுவன் ஒருவன் படிப்பிலே முன்னேறுகிறுன் என்பது அன்னுர் கொள்கை. சிறுரை நரக வேதனைக்கு உள்ளாக்கிய பள்ளிகள் ஒரு காலத்தில் இருந்தன. பள்ளி என்ற பேச்சு அவர்களைப் பதை பதைக்கச் செய்தது. ஆசிரியர் முன்னிலையில் அவர்கள் நடு நடுங்குவார்கள். வண்டியில் காளைகளைப் பூட்டுகிற வண்டிக்காரன் சவுக்கால் அவைகளை அடித்துப் பூட்டுவான். ஆசிரியர் அங்ஙனம் மாணுக்கனைப் பிரம்பால் அடித்துப் பிறகு பாடம் புகட்டுவார். தங்கள் கைவசமிருந்த உயிர்வகைகளுக்குச் சுறுசுறுப்பு ஊட்டியதாக அன்னவர் எண்ணிவந்தனர். இப்பழக்கம் இன்று அடிபட்டுப்போயிற்று.

பாடம் புகட்டுவதைப்பற்றிய கோட்பாடு தெளிவடைந்திருக்கிறது. செடியொன்று வளர்தற்குத் தோட்டக்காரன் உதவி புரிகிறுன். செடியை அவன் சிருஷ்டிக்க முடியாது. அங்ஙனம் ஆசிரியர் மாணுக்கனுடைய அறிவு வளர்ச்சிக்கு உதவி புரிகிறுர் ; அறிவை அவனிடம் திணிக்க முடியாது. அது உள்ளத்தினின்று உதயமாகி வருகிறது. மிரட்டுதலும், பயமுட்டுதலும், அடித்தலும் அதற்கு உதவமாட்டா.

தத்தம் இனத்தில் பிறந்தவைகளுக்கு உயிர்வகைகள் தம் போக்கில் பயிற்சியளிக்கின்றன. அது அலாதியாக

மனிதனுடைய உரிமையன்று. மனிதன் மற்ற உயிர்களிட மிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய முறைகள் பல உள. பறவைகள் குஞ்சுகளுக்குப் பயிற்சி தருகின்றன. விலங்கு கள் குட்டிகளுக்குப் பயிற்சி தருகின்றன. அச்செயல்களை மனிதன் கவனித்துப் பார்க்கவேண்டும். ஒவ்வோர் இனத் துக்கும் ஏற்ற அறிவுத்திறமை உள்ளத்தில் புதைந்திருக் கிறது. புறவுலகினின்று வருகிற தூண்டுதல் அத் திறனைத் தோற்றத்துக்குக் கொண்டுவருகிறது.

இக்கோட்பாடு மானுட உலகுக்கும் ஒத்திருக்கிறது. தக்க சூழ்நிலையை அமைத்துக்கொடுப்பது முதியோர்செயல். வளர்ச்சிக்கு வேண்டிய தூண்டுதலையும் அவர்கள் செய்கின் றனர். அறிவு உள்ளத்தினின்று தானாக ஓங்குகிறது. மானுட னுக்கும் மற்ற உயிர் வகைகளுக்கும் ஒரு வேற்றுமையுண்டு. பறக்கக் கற்றுக்கொள்வது பறவையின் பாங்கு. நடக்கக் கற்றுக்கொள்வது விலங்கின் பாங்கு. அதனதன் வாழ்க் கைக்குத் தேவையான ஆற்றலை மட்டும் மற்ற உயிர்கள் வளர்த்துக் கொள்கின்றன. ஆனால் மனிதனோ கணக்கற்ற ஆற்றல்களை யுடையவனாக இருக்கிறான். வளர்கின்ற குழந்தை ஒவ்வொன்றுக்கும் ஒரு தனி வல்லமை வெளியாகின்றது. அவை யாவுக்கும் வசதி யளிப்பது களிக்கூடத்தின் செயல் ஆகும். குழந்தைகளுக்கிடையில் புகட்டுதல், புகட்டப் பெறுதல், சிரித்தல், அழல், அடித்தல், அடியுண்ணுதல், வேடிக்கை பண்ணுதல், சினந்து கொள்ளுதல், சண்டை போடுதல், நட்புப் பூணுதல், உதவுதல், உதவியை ஏற்றுக் கொள்ளுதல், தாக்குதல், தாக்கப் படுதல், உறவாடுதல், ஒதுங்கியிருப்பது ஆகிய இத்தனைவித இணக்கங்கள் நிகழும். இவை யாவின் வாயிலாகச் சிறுர் வாழ்க்கைப் பயிற்சி பெற்றுவருகின்றனர். விளையாட்டாகச் செய்வது

வினையாக வடிவெடுக்கிறது என்பதன் கோட்பாடு இதுவே யாம்.

காலமெல்லாம் சிறுவர்கள் சிரித்துக் கொண்டிருப்பது சாத்தியமன்று. இடையிடையே அவர்கள் இடைஞ்சல்களை முன்னிட்டு அழுவது அவசியம். ஒரு குழந்தை மற்றொரு குழந்தையைத் தாக்குகிறது. அந்நிகழ்ச்சியில் பெரியபாடம் ஒன்று உளது. அனுகூலமான நிகழ்ச்சி பிரதிகூலமான நிகழ்ச்சி ஆகிய இரண்டும் தேவை. வாழ்க்கைக்கு ஆயத்த மாதல் அவைகளின் வாயிலாக நிறைவேறுகிறது. மானுட வாழ்க்கையில் என்னென்ன நிகழ்ச்சிகள் இருக்கின்றனவோ அவை யாவும் களிக்கூடத்தில் விளையாட்டாக நடைபெறு கின்றன. விரைவில் அவைகள் முடிவடைகின்றன. அவை களை முன்னிட்டு மனக்கிலேசம் ஏதும் உண்டாவதில்லை. ஆதலால் ஆசிரியை விளையாட்டுச் சண்டைக்கு முட்டுக் கட்டை போடலாகாது. அவைகள் வரம்புக்கு உட்பட்டவை களாயிருக்கவேண்டும் என்பதை மட்டும் பார்த்துக்கொள்ள வேண்டும். விதவிதமான மனப்பான்மைகள் வாயிலாக வாழ்க்கைப் பயிற்சி நடைபெற்று வருகிறது. தங்கள் இயல்புகளைத் தங்குதடையின்றி அவர்கள் வெளிப்படுத்து வது முற்றிலும் அவசியம். வளர்ச்சிக்கு அச்செயல்கள் உதவி புரிகின்றன. குழந்தைகளுக்குக் களிக்கூடம் நல்கும் பயன் இதுவேயாம்.

## இயற்கையின் திட்டம்

ஒரு மந்தை பசுக்களை ஆராய்ந்து பார்த்தால் அவை யாவும் பசுவின் பாங்கு படைத்திருப்பது வெளியாகும். அதேவிதத்தில் நாய்கள் யாவும் நாய்க்குணம் படைத்திருப் பது புலப்படும். பூனைகள் எல்லாம் பூனையியல்பு பூண்டிருப்

பதைப் பார்க்கலாம். இனி, காட்டில் வாழும் விலங்குகளுக்கும் அதனதன் இயல்பு மாருது அமைந்திருக்கிறது. ஆனல் மானுட ஜாதியின் அமைப்பு அத்தகையதன்று. உடல் அமைப்பில் அவன் மானுடன் என்பது வெளிப்படை. மற்று மன அமைப்பிலோ அவன் எந்தத் திட்டத்திலும் அடங்காதவன். எத்தனை மனிதர்களோ அத்தனைவித மனப்பாங்குகள் என்று மொழிவது மெய்யாகும். மன அமைப்பில் புலி சிறுத்தை போன்ற மக்கள் இருக்கிருர்கள்; பாம்பு தேள் போன்றவர்கள் இருக்கிருர்கள்; பசுபோன்றவர்கள் இருக்கிருர்கள்; மக்களுள் தேவர் போன்றவர்களும் இருக்கிருர்கள். மானுட வடிவம் எல்லாப் பாங்குகளுக்கும் இடம் தருகிறது. மனித வர்க்கம் அத்தகைய அற்புதமானது.

இனி இத்தனை மனிதர்களுக்கும் பொது இயல்பு ஒன்று உண்டு. எந்த மனிதனுவது தனித்து வாழ்ந்திருக்க விரும்புவதில்லை. சமுதாய வாழ்க்கைமுறை மக்கள் எல்லார்க்கும் பொதுவானது. இனத்தாருடன் கூடி வாழ்ந்திருப்பதில் மனிதன் தலைசிறந்தவன். சமுதாய அமைப்பை ஓங்குவிப்பதில் மக்கள் எல்லாரும் ஒன்றுபடுகின்றனர். பொது நலனுக்கு ஆமோதிப்புத்தருவது அவர்களுடைய பொதுஇயல்பு ஆகும்.

களிக்கூடம் ஒன்று அமைக்கும்பொழுது இந்த அடிப்படை வேற்றுமையையும் ஒற்றுமையையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

ஒவ்வொரு குழந்தைக்கும் அதன் தனிப்பாங்கு இருக்கிறது. களிக்கூடம் ஒன்றில் பல குழந்தைகளைச் சேர்க்கும்போது அத்தனைவித இயல்புகளை ஒன்ருகத் திரட்டுகிறோம். ஆயினும் அவர்கள் எல்லார்க்கும் ஒரே பயிற்சியையோ பாங்கையோ வழங்கலாகாது. களிக்கூடம் ஒன்றுக்கும்

இராணுவப் பாசறையொன்றுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமையை ஈண்டு ஆராய்தல் அவசியமாகிறது. இராணுவப் பயிற்சிசாலை யொன்றனுள் அங்கஹீனன் ஒருவன் சேர்த்துக் கொள்ளப்படமாட்டான். அன்னவன் யுத்தத்துக்குப் பயன் படமாட்டான். பின்பு களிக்கூடத்தில் அங்கஹீனக் குழந்தையொன்று சேர்த்துக் கொள்ளப்பட மாட்டாது. ஏனென்றால் மற்ற குழந்தைகள் விளையாட்டுத்தனமாக அதன் உடலில் உள்ள குறைபாட்டைக் குறித்து ஏளனம் பண்ணும். நொண்டியாகவோ முடவனாகவோ இருக்கும் குழந்தைக்கு அது சங்கடமாக இருக்கும். துயரத்துக்கு அது ஆளாகும். இனி ராணுவ முகாமுக்கும் களிக்கூடத்துக்கும் உள்ள வேற்றுமையைக் குறிப்பிடுவோம். இராணுவப் பாசறையில் பயிற்சிபெறுகிற எல்லார்க்கும் ஒரே மனப்பான்மை, ஒரே பாங்கில் நிற்பது, நடைபோடுவது ஆகிய கட்டுப்பாடுகள் உண்டு. பட்டாளம் முழுதையும் ஒரே அச்சில் அமைப்பது இராணுவத்தின் குறிக்கோள். களிக்கூடத்திலோ ஒவ்வொரு குழந்தையும் அதனதன் போக்கில் வளரவேண்டும். யாருடைய பாங்குக்கும் பங்கம் விளைவிக்கலாகாது. ஒரு தோட்டத்தில் விதவிதமான மரம் செடி கொடிகள் வளர்வது போன்று வெவ்வேறு பாங்குகளில் சிறார் உருவாக வேண்டும். பயிற்சி முறையில் இங்ஙனம் களிக்கூடம் பட்டாளப் பள்ளியினின்று வேறுபடுகின்றது.

குழந்தைகள் படைத்துள்ள வெவ்வேறு இயல்புகளைச் சரியாகவும் ஆழ்ந்தும் அறிந்திருக்கவேண்டுமென்று ஆசிரியை கவலைப்படவேண்டியதில்லை. அவர்களைச் சரியாகப் பராமரித்துவந்தால் போதுமானது. விதவிதமான செடிகள் தோட்டத்தில் வளர்கின்றன. தோட்டக்காரன் அவை யாவுக்கும் எருப்போட்டு நீர் பாய்ச்சுவதுபோன்று ஆசிரியை

சிறுர் அனைவரையும் ஒரே பாங்கில் கவனித்து வந்தால் போதுமானது. அதற்கிடையில் ஒவ்வொரு குழந்தையும் தன் போக்கில் வளர்ந்து வருகிறது. தன் தனியியல்பைத் தானே வெளிப்படுத்திக் கொள்கிறது. குதூகலமாகக் குழந்தை வளர்ந்து வருவதை மட்டும் காப்பாளர் கவனித்துக்கொள்ள வேண்டும்.

இரண்டுபேர் மனம் ஒரே அச்சில் அமைவதில்லை என்பதை ஏற்கனவே ஆராய்ந்தோம். எத்தனை மாந்தரோ அத்தனை மனது என்பதே கோட்பாடு. ஆயினும் அத்தனைபேர்க்கிடையில் மூன்று கோட்பாடுகளில் ஒற்றுமையுண்டு. மக்கள் எல்லாரும் வாழ்ந்திருக்கத் திட்டமிடுகின்றனர். அழிந்து பட்டுப்போக யாரும் முயலுவதில்லை. உயிரைக் காப்பதில் கருத்து வேறுபாடில்லை. அடுத்தபடியாக அறிவைத்தெளிவு படுத்துவதில் அனைவர்க்கும் ஆர்வமிருக்கிறது. அதைப் பாழ்படுத்துவதில் யாருக்கும் சம்மதமில்லை. அவரவர் துறையில் அவரவர் போக்கில் அறிவை வளர்க்க அனைவரும் விரும்புகின்றனர். மூன்ருவதாக அமைவது இன்பத்தைப் பற்றிய நாட்டம். ஆனந்தத்தை ஓங்குவிக்க அனைவரும் முந்துகின்றனர். துன்பத்தைத் தவிர்ப்பது எல்லார்க்கும் பொது நோக்கமாகிறது. உயிர்ப்பற்று, அறிவுப்பற்று, ஆனந்தப் பற்று — இந்த மூன்றுவிதப் பற்றுக்களும் எல்லார்க்கும் பொதுவானவைகளாம். எண்ணிறந்த வேற்றுமைகளுக்கிடையில் இந்த மூன்றுவித ஒற்றுமையானது யாராலும் அசைக்க முடியாததாம்.

சிறுர்களுள் ஒரு சிலர் மனக்கோளாறுகளுக்கு ஆளாகின்றனர். சிலர்தானே என்று எண்ணி அன்னவர்களின்குறைகளைக் கவனியாது இருந்துவிடலாகாது. பயப்படுதல் என்னும் மனக்கோளாறு சர்வ சாதாரணமானது. எப்பொழுது

எப்படிக் குழந்தை பயத்துக்கு இலக்கு ஆனது என்பதைக் கண்டுபிடிக்க முடியாது. ஆதலால் அதைப்பற்றிய தீவிர ஆராய்ச்சி ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக நல்ல சூழ்நிலையில் அந்தச் சிசுவை விட்டுவைப்பது உசிதம். பயம் இன்னதென்று அறியாத மற்ற குழந்தைகளோடு அதைச் சேர்த்துவிட்டால் போதுமானது. மற்றவர்கள் யாண்டும் துணிவும் தைரியமும் முன்னீட்டமும் வாய்க்கப் பெற்றவர்களாய் இருக்கின்றனர். அந்தத் திண்ணிய கூட்டுறவானது அஞ்சியிருக்கும் குழந்தையின் அச்சத்தை அறவே அகற்றிவிடுகிறது. நல்லார் இணக்கத்தின் சிறப்பு சிறூர் இணக்கத்தில் இனிது அமைந்திருக்கிறது. முகம் வாடியிருத்தல், தன்னந்தனியனாகத் தனித்திருத்தல், நாணம் பூண்டிருத்தல், தயங்கியிருத்தல், சோர்ந்திருத்தல், அழுதுகொண்டிருத்தல் - இத்தகைய குறைபாடுகளையெல்லாம் நல்ல களிக்கூடம் எளிதில் திருத்தியமைக்கிறது.

குதூகலமான விளையாட்டு, உள்ளம் பொங்கி வருகிற சிரிப்பு, குதியாட்டத்தில் உடலை உந்தித் தள்ளுகிற ஊக்கம் – இவை யாவும் ஒன்றுகூடிக் களிக்கூடத்தைச் சிறுவர் சொர்க்கமாக மாற்றுகிறது. மனக்கோளாறுகளையெல்லாம் இந்த சொர்க்கம் சீர்படுத்திவிடுகிறது. மாண்புக்கு இருப்பிடமாய்க் குழந்தைகள் தாமே திருந்தியமைகின்றனர். தகைசான்ற இந்தச் சூழ்நிலையை உண்டுபண்ணிக் கொடுப்பது ஒன்றே ஆசிரியையின் செயல் ஆகிறது.

## மனப்பாங்கு

உயிர்கள் அனைத்தும் தத்தம் பாங்குகளை வெளிப்படுத்த முயன்று கொண்டிருக்கின்றன. சில உயிர்வகைகள் விரைந்து முன்னேறுகின்றன. மற்றும் சில நிதானமாக வளர்

கின்றன. துண்டித்தெடுத்த ரோஜாக் குச்சியை இதற்குச் சான்ருக எடுத்துக்கொள்ளலாம். காய்ந்துபோன குச்சிக்கும் அதற்கும் புறத்தோற்றத்தில் வேற்றுமையில்லே. ஆயினும் பண்படுத்திய ஈர நிலத்தில் அதை நட்டால் சில வாரங்களுள் அது மண்ணில் வேர் விடுகிறது. மேற்பகுதியில் துளிர்க்கிறது. நாளடைவில் அது அழகாகப் பூக்கிறது. ரோஜாச் செடி இரண்டு வருஷங்களில் காட்டுகிற வளர்ச்சியை இரண்டு நிமிஷங்களில் வெளிப்படுத்திஞல் அதை ஜால வித்தை என்போம். ஜாலவித்தை போன்று விரைவில் வளரக் கூடியவைகள் இயற்கையில் சில இருக்கின்றன. குழந்தைகளின் மனவளர்ச்சி அவைகளில் ஒன்று.

இயற்கையில் உள்ள அமைப்புகளுள் மனது என்னும் அமைப்பு மிக அற்புதமானது. மிக மிகச் சிக்கலானது என்றும் அதை இயம்பலாம். பூர்வீகத்தில் பண்பாடு அடையாது ஆரம்ப நிலேயில் மனிதனுடைய மனது இருந்தது. அத்தகைய மனநிலேயை இன்றைக்கும் சில மாந்தரிடத்துக் காணலாம். முன்னேற்றத்தில் உச்ச நிலேக்கு வந்துள்ள மனப்பான்மையையும் இன்றைக்குக் காணலாம். இனிக் குழந்தையின் மனதோ பூர்வீக நிலேயினின்று நவீன நிலே வரையில் அதிவேகம் வளர்ச்சியடைகின்றது. வியப்புக்குரிய மற்ளுெரு நிலே குழந்தையினிடத்து இருக்கிறது. அதன் முன்னிலேயில் மனிதன் தன்னுடைய கோணல்களேயெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிடுகிருன். தன்னேயறியாது அவன் ஆங்குச் சிறிது நேரத்துக்கு இன்பநிலே யெய்துகிருன். குழந்தையின் தூய மனப்பான்மையே இதற்குக் காரணமாகிறது. அந்தத் தூய்மை முதியோனுடைய மனதின்மீது ஆதிக்கம் செலுத்துகிறது. அதே குழந்தை அடுத்தபடியாக விளேயாட்டை விரும்புகிறது. விளேயாட்டின் வாயிலாக அது தன்பாங்கைப்

பிறர்க்கும் புலனுக்குகிறது. குழந்தையின் மனவளர்ச்சிக்கு நிலைக்களமாயிருப்பது களிக்கூடம். இனி, இந்தக் களத்தில் குழந்தையின் வளர்ச்சிக்கு முகாமையாயிருக்கிற விளையாட்டுக் கருவிகளெல்லாம் நன்கு அமைக்கப் பெற்றிருக்க வேண்டும். தன் மனப்பான்மையைக் குழந்தை விளையாட்டின் வாயிலாக வெளிப்படுத்துகிறது. தன் விருப்பம்போல் தன் மனதை வெளிப்படுத்த அதற்கு அவகாசம் கொடுக்க வேண்டும். களிக்கூடம் குழந்தைக்குச் செய்கிற பேருபகாரம் இதுவேயாம். அது யாண்டும் மகிழ்வுற்றிருக்குமானால் அதன் மனவளர்ச்சிக்கு அந்த மகிழ்வே நல்ல எடுத்துக்காட்டு ஆகும்.

படைத்தல், காத்தல், துடைத்தல் ஆகிய முத்தொழில்கள் இயற்கையில் இடையறாது நிகழ்ந்து வருகின்றன. வளர்ந்து வருகிற குழந்தைகளிடத்தும் இந்த மூன்று கிருத்தியங்களைக் காணலாம். ஒவ்வொரு குழந்தையினிடத்தும் இந்த மூன்று செயல்களுள் ஏதோ ஒன்று முன் அணியில் இருப்பதைக் காணலாம். சிறுவர்கள் விளையாடிக்கொண்டிருக்கும்போது கவனித்தால் இவ்வுண்மை விளங்கும். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய மூன்று கிருத்தியங்களைச் செய்து வருகிற மும்மூர்த்திகள் சொரூபங்களாகச் சிறுவர்கள் விளையாடும்போது விளங்குவார்கள். சிறு சிறு உலகங்களை ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் அவர்கள் செய்கிறார்கள். இம்மூன்றனுள் உடைத்துப் பாழ்படுத்தும் செயலே முந்தி நிற்கும். குழந்தைகள் பெற்றுள்ள ஸம்ஹார ஆனந்தத்தை அறிந்துகொள்ளாத பெற்றோர்கள் சினந்துகொண்டு சிறார் அடைகிற இன்பத்தைத் துன்பமாக மாற்றுகின்றனர். அப்படியல்லாது அந்த நாசஹாரச் செயலுக்கு உற்சாகம் கொடுத்துப் பழைய பண்டங்களை உடைக்கும்படி அவர்களைத்

தூண்டினால் இரண்டுவித நன்மைகள் விளையும். சிறார் இன்புறுவது முதல் நன்மை. வேண்டப்படாத பொருள்களை உரு மாற்றுவது இரண்டாவது நன்மை. ஒரு சிறிதளவு பொருள் நஷ்டம் விளைந்தால் அதைப் பொருள்படுத்த லாகாது. குழந்தை அடைகிற மகிழ்வும் அதன் வளர்ச்சியும் சேர்ந்து பெரிய ஊதியம் ஆகிறது. மன வளர்ச்சிக்கு மதிப்பு கொடுக்கும் பெற்றோர்கள் இக்கோட்பாட்டை ஞாபகத் தில் வைத்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

குழந்தையினுடைய சுதந்தரத்துக்கு இடுக்கண் வரும் பொழுது அது அழுகிறது. அதற்கு ஏமாற்றத்தை உண்டு பண்ணலாகாது. ஏமாற்றமடைந்து குழந்தையொன்று அழு மானால் அத்தகைய அழுகை அதன் வளர்ச்சிக்குத் தடையா கிறது. எச்செயலில் சிசு ஒன்று ஊக்கத்துடன் ஈடுபடு கிறதோ அச்செயல் அதன் மனப்பாங்கை வெளிப்படுத்து கிறது. பின்பு அந்த மனப்பாங்கோ விலங்குத் தன்மையி லிருந்து தெய்வத்தன்மை வரையில் எல்லாப் படித்தரங்களி லும் இடம் பெறுகிறது. ஆதலால் குழந்தை எடுத்துக்கொள் ளுகிற ஒவ்வொரு முயற்சியும் அதன் வளர்ச்சிக்கு இன்றி யமையாததாம். அதன் முயற்சிக்குத் தடை போடலாகாது. முயற்சி மட்டமானதாயிருந்தால் அதைப் பயன்படக்கூடிய தாகத் திருத்தியமைக்கவேண்டும். தென்படுகிறவர்களையெல் லாம் குழந்தை அடிக்க முயலுகிறது. அதன் கையில் கொத்து ஒன்றைக்கொடுத்துத் தோட்டத்தைக் கிளரும்படி அதைத் தூண்டவேண்டும். கழி ஒன்றை அதன் கையில் கொடுத்துக் களத்தில் பரப்பியிருக்கும் கதிர்களை அடித்துத் தானியத் தைப் பிரித்தெடுக்கப் பண்ண வேண்டும். செடிகளினின்று சருகுகளைப் பிரித்தெடுக்கும்படி தூண்டினால் குழந்தையின் நாசகாரி இயல்பு ஆக்கத்துக்குப் பயன்படுத்தப்படுகிறது.

சிசுவின் வளர்ச்சிக்கும் அச்செயல் ஏதுவாகிறது. களிக் கூடத்தில் சிறுரைப் பேணும் உபாயம் இதுவாம்.

## வாழ்க்கை முறை

ஆட்டுக்குட்டிகளைப் பட்டியினின்று வெளியே ஓடவிட் டால் அவைகள் துள்ளிக் குதித்துக்கொண்டு வெளியேறு கின்றன. இங்குமங்கும் ஓடி விளையாடுகின்றன. பின்பு மைதானத்தில் மேயப் புகுகின்றன. களிக்கூடத்துக்கு வரு கிற சிறுவர்கள் வாழ்வு அப்படியிருக்க வேண்டும். அவர் களுடைய களியாட்டத்துக்கு வேண்டிய வசதிகளெல்லாம் இங்கே செய்துவைக்கப்பட்டிருக்கின்றன. அன்ருட அலுவல் களை அவர்களே திட்டப்படுத்த வேண்டும். அதனுல் அவர் களுடைய சிந்தனு சக்தி உருவெடுக்கிறது. உணர்ச்சியும் தோற்றத்துக்கு வருகிறது. சிற்றுண்டி சாலைக்கு வருகிற வர்கள் தங்களுக்குத் தேவையான பட்சணங்களைத் தாங்களே கேட்டு வாங்குகின்றனர். அதே விதத்தில் குழந்தைகள் தங்களுக்கு விருப்பமான விளையாட்டுக்களைத் தாங்களே தீர்மானித்து எடுக்கவேண்டும். சுயேச்சையை வளர்க்கிற சூழ்நிலைதான் களிக்கூடம் எனப்பெயர் பெறுகிறது. தடை யெதையும் சிருர் அறிகிறதில்லை. ஆதலால் அவர்களுடைய வளர்ச்சி இனிது நிறைவேறுகிறது.

விளையாடல்களில் ஈடுபடுகிற குழந்தைகள் குறிப்பிட்ட காலங்களில் குறிப்பிட்ட விளையாட்டுக்களை எடுத்துக் கொள்ளவேண்டும் என்னும் நியதியில்லை. எந்த விளை யாட்டை எப்பொழுது வேண்டுமானுலும் செயலுக்குக் கொண்டுவரலாம். ஆனுல் குறிப்பிட்ட காலத்திலேயே நடாத்தவேண்டிய மூன்று நிகழ்ச்சிகள் இருக்கின்றன. அவை களுள் முதலாவது பிரார்த்தனை. களிக்கூடம் பிரார்த்தனை

பண்ணித் துவங்குகிறது; பிரார்த்தனை பண்ணி முடிவுறுகிறது. அச்செயல்கள் காலம் பிசகாது நடைபெறவேண்டும். நண்பகல் உணவு அருந்துதற்கு முன்பு ஒரு பிரார்த்தனை நிகழ்வது அவசியம். அது குறித்த காலத்திலேயே நிகழவேண்டும். குழந்தைகளைச் சிறிது நேரம் ஓய்வில் வைத்திருத்தல் வேண்டும். அச்செயலும் குறித்த காலத்திலேயே நிகழவேண்டும். சிலர் உறங்கலாம், வேறு சிலர் விழித்திருக்கலாம். விழித்திருப்பவரும் மௌனத்தில் அடங்கியிருத்தல் அவசியமாகிறது. இச்செயல்கள் காலத்தில் கட்டுப்படுகின்றன. குறித்த நேரங்களிலேயே அவைகள் ஒழுங்காய் நிகழ்கின்றன. அது சிறார்க்குச் சிறந்த பயிற்சியாகிறது.

உண்ணும் உணவை ஒரே விதத்தில் சமைக்கலாகாது. பலப்பலவிதங்களில் அதைச்சமைப்பது சாத்தியம். பசியைப் பெருக்குதற்குப் பலவித உணவு உபாயமாகிறது. அதைச் சுவைப்பதும் அப்போது சாத்தியமாகிறது. விளையாட்டின் பாங்கும் அத்தகையதே. குழந்தைகள் ஒரேவித விளையாட்டை எப்போதுமே விளையாடிக்கொண்டிருக்கலாகாது. விதவிதமான விளையாட்டு ஊக்கத்தை ஓங்குவிக்கிறது. பள்ளிக்கூடத்தில் பாடம் மாறியமைவது போன்று களிக்கூடத்தில் விளையாட்டு மாறிமாறி அமையவேண்டும். நேரத்துக்கு ஏற்ற விளையாட்டு, பருவத்துக்கு ஏற்ற விளையாட்டு, இங்ஙனம் அதில் வேறுபாடுகள் தேவையாகின்றன. கொளுத்துகிற வெயிலில் கொஞ்ச நேரம் விளையாடவேண்டும். கொட்டுகிற மழையிலும் சிறிதுநேரம் விளையாடவேண்டும். இவை போன்ற களியாட்டங்கள் வரம்புகடந்து போய்விடலாகாது. ஆசிரியைமார்கள் கடமை அவைகளை அளவுக்கு உட்படுத்தி வைத்திருத்தலாம். அதே வேளைகளில் குழந்தைகளின் குதூகலத்துக்குத் தடையொன்றையும் விளைவித்துவிடலாகாது.

அவர்கள் சம்மதத்தோடு அமைக்கப்பெற்ற தடை சாலச் சிறந்தது. குழந்தைகளின் எண்ணிக்கை அதிகமாக இருக் கும்போது ஏக காலத்தில் இரண்டு மூன்று விளையாட்டுக்கள் நிகழலாம். கைவசமுள்ள குறைந்த விளையாட்டுக் கருவி களைக்கொண்டு மிகைப்பட்ட களியாட்டங்களை நிறைவேற்று வது திறமைக்கு அறிகுறியாகும். மனப்பான்மையையும் விருப்பத்தையும் அனுசரித்தே குழந்தைகளைக் கூட்டம் கூட்டமாகப் பிரிக்கவேண்டும். கூட்டங்களாகப் பிரியும் பொறுப்பை அவர்களிடத்தே ஒப்படைப்பதும் உசிதம். மகிழ்ச்சியோடு அவர்கள் அதை நிறைவேற்றுவார்கள். அவர்கள் மகிழ்வுற்றிருப்பதே களிக்கூடத்தின் நோக்கமாம்.

புதிதாகப் பிறப்பெடுத்து இவ்வுலகினுள் வந்துள்ள உயிர்வகைகள் அனைத்தும் விளையாட்டின் வாயிலாகத் தங் கள் மகிழ்வை வெளிப்படுத்துகின்றன. அதற்கேற்ற காரண மும் உண்டு. பரமனிடத்திருந்து இவை யாவும் வந்துள்ளன. பரமனே ஆனந்த சொரூபம். ஆனந்தத்தினின்று உதித்து வந்துள்ள உயிர்கள் ஆனந்தத்தில் சொக்கியிருப்பது இயல்பு தானே! பிறந்துள்ள சிசு புன்சிரிப்பின் வாயிலாகத் தன் பேரியல்பை விளக்குகிறது. பின்பு அழுகையானது ஆனந்தத் தின் எதிர்மறைத் தோற்றமாம். தன்னுடைய இனிய இயல் புக்கு இன்னல் வரும்பொழுது குழந்தை கரைகிறது. இன் னல் ஏதும் இல்லாதபொழுது தாயின் மடியின்மீது துள்ளிக் குதிக்கவும் ஆடவும் செய்கிறது. அதே பேரியல்பு களிக் கூடத்தில் இன்னும் விரிந்த பாங்கில் வடிவெடுக்கிறது. இங்கு மங்கும் அது ஓடியாட வேண்டியவாறு வசதி செய்து வைக்கவேண்டும். எங்தெந்தக் களியாட்டத்தில் அது எப்படி யெல்லாம் திளைத்திருக்க விரும்புகிறதோ அப்படியெல்லாம் அதற்கு வசதி செய்து கொடுப்பது முற்றிலும் அவசியமா

கிறது. ஒவ்வொரு புதிய விளையாட்டும் குழந்தையின் உள்ளத்தில் புதைந்துகிடக்கும் திறமையை முன்னணிக்குக் கொண்டுவருகிறது. அப்போது அலர்ந்த மலர்போன்று அதன் முகவிலாசத்தில் இனிமை மிளிர்கிறது. இன்பம் ஓங்குதற்கு ஏற்ப அதன் வளர்ச்சி திண்ணியதாகிறது. ஆத்ம சொரூபம் அங்ஙனம் உன்னத நிலைக்கு வருகிறது.

## விதவிதமான விளையாட்டுக்கள்

மக்களின் திறமையைச் செப்பனிடுதற்கென்றே அமைந்துள்ள விளையாட்டுக்கள் சில உள. அவைகளைப் பயிலுதற்கேற்பச் சிறுவர்கள் திண்ணிய வாழ்க்கைக்குத் தங்களை ஆயத்தப்படுத்துகின்றனர். அவ்வுண்மையை அறிந்துகொள்ளாமலேயே அவர்கள் பக்குவமாகின்றனர். பலவிதமான பந்தாட்டங்கள் இருக்கின்றன. அவைகளை விளையாடுவதால் சுறுசுறுப்பும் சமயோசித புத்தியும் தாமாக உண்டாகின்றன. திறமை, எச்சரிக்கை, கூர்மை ஆகிய மனத்திட்பங்கள் வந்தமைகின்றன. பின்பு ஆயுள் முழுதுக்கும் அவைகள் பயன்படுவனவாகின்றன. விளையாட்டு மேடையில் வாய்க்கிற இணக்க உணர்வு (Team Spirit) ஒப்பு உயர்வற்றதாகும். வாழ்க்கையில் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அது நன்கு உதவும். சமுதாயத்திட்டங்களிலும் போர்க்களத்திலும் சேர்ந்து வினையாற்றுதற்கு இணக்க உணர்வு நன்கு பயன்படுகிறது. தனியாள் ஒருவனுடைய சாதிப்பு சமுதாய சாதிப்பாக மேன்மையுறுகிறது. எறும்பு செய்கிற செயல் இதற்குச் சான்று ஆகிறது. அதன் செயல் எறும்பு வளைக்கு உரியதாகிறது. துவக்கத்தில் குழந்தைகள் தங்கள் விருப்பம்போல் விளையாடலாம். பிறகு படிப்படியாகச்சட்டதிட்டம் வருகிறது. பயிற்சி பெற்றபின் விளையாட்டின் நியதிக்கு உட்பட்டவர்கள்

ஆகின்றனர். கடைசியில் சமுதாயத்துக்கு உரிய ஒழுங்குப் பாட்டுடன் கூடிய குடிமக்கள் ஆகின்றனர்.

சீலத்தை வளர்க்கிற இன்னொருவித விளையாட்டுஉண்டு. பறவைகளையும் கால்நடைகளையும் வளர்த்து வருவதில் நலன் மிக விளைகிறது. சிற்றுயிர்களைச் சித்திரவதை பண்ணுவதில் சிறுர் மகிழ்வடைகின்றனர். அக்கொடிய இயல்பைக் குணம் நிறைந்த இயல்பாக மாற்ற வேண்டும். பிராணிகளைப் பிரிய மாகப் பேணுவது அதற்கு உற்ற உபாயமாகிறது. கோழி, புரு, மயில் முதலியவைகளுக்கு அன்புடன் தீனிபோடுதல், கன்றுகளைக் குளிப்பாட்டுதல், அவைகளோடு விளையாடு தல், பசுவுக்குச் சிறிது சிறிதாகப் புல் எடுத்து வாயில் ஊட்டுதல் ஆகிய செயல்கள் அன்பை வளர்க்கின்றன. இறை வனே உயிர்கள் அனைத்தும் ஆயிருக்கிறுர். ஆதலால் உயிர் களை நேசிப்பது இறைவனை நேசிப்பதற்கு ஒப்பாகும். சிறு வர்களுக்கு இந்தச் சீரிய பயிற்சியைக் கொடுப்பதில் நலன் மிக உண்டாகும். பூந்தோட்டத்தையும் கறிகாய்த் தோட் டத்தையும் உருவாக்குவது நல்ல பயிற்சியாகும். பூக்களைக் கொய்து கடவுள் வழிபாடு செய்வது, காய் கீரை வகை களைச் சேகரித்துச் சமைப்பது, கனிகளை உண்டுபண்ணிக் கட வுளுக்குப் படைத்துப் பிரசாதமாக எல்லார்க்கும் வழங்குதல் ஆகிய செயல்கள் சிறுவர்களுக்குப் பெருமகிழ்வூட்டுகின்றன. அவைகள் நல்ல வாழ்க்கைப் பயிற்சியும் ஆகின்றன. இதனல் சுயநலன் பொதுநலனுக விரிவடைகிறது.

விருந்து ஓம்புதல் மற்றொரு நல்ல விளையாட்டு ஆகிறது. சிறுவர்களுள் ஒரு கூட்டம் மற்றொரு கூட்டத்தை விருந்துக்கு அழைக்கிறது. அப்படி வருகிறவர்களுக்கு முறைப்படி வர வேற்பு அளிக்கிறது. பிறகு இனிய உபசரிப்புடன் சிற்றுண்டி வழங்கப்படுகிறது. அதைத் தொடர்ந்து உரையாடல், மகிழ்

வித்தல் முதலியன நிகழ்கின்றன. அழைக்கப்பட்டவர்கள் கடைசியாக வழியனுப்பி வைக்கப்படுகின்றனர். இந்த விளையாட்டு எதிர்கால வாழ்வுக்கு நன்கு பயன்படும்.

சமுதாய வைபவங்கள் சில மிக விமரிசையாக நிகழ்கின்றன. அவைகளுள் மணம் புரிவது அல்லது விவாகம் பண்ணி வைப்பது மிக முக்கியமானது. குழந்தைகள் அச்செயலை ஊன்றிக் கவனிக்கின்றனர். பிறகு அதே விதத்தில்தாங்களும் விவாகம் நடாத்தி விளையாட விரும்புகின்றனர். அப்படிச் செய்வதில் குற்றமொன்றுமில்லை. ஆதலால் அதற்கு வேண்டியவாறு ஊக்கம் தரலாம். ஆனால் குழந்தைகள் தாமே மணமக்களாக இருக்கவேண்டிய அவசியமில்லை. இரண்டு பொம்மைகளை எடுத்து மணமக்களாக வைத்துக்கொள்ளலாம். விவாகச் சடங்கை விரிவாகக்கொண்டு செலுத்துதலில் தடையேதுமில்லை. பின்பு இதற்கு ஒப்ப மற்றொரு நிகழ்ச்சியுண்டு. ஏதேனும் ஒரு வீட்டில் மரணம் நிகழ்ந்துவிட்டால் அதையொட்டிய நிகழ்ச்சிகளைக் குழந்தைகள் கவனித்துப் பார்க்கின்றனர். இழவுகாரியங்களை விளையாட்டாகப் பண்ண அவர்கள் விரும்புகின்றனர். அதற்கும் இடம் தரலாம். பொம்மை ஒன்றை நோய்வாய்ப்படச் செய்தல், அதற்கு டாக்டர் வந்து சிகிச்சை பண்ணுவது, அது சாவது, அதற்காக அழுவது, அதைச் சுடுகாட்டுக்கு எடுத்துச் சென்று தகனம் பண்ணுவது ஆகிய இவையாவையும் விளையாட்டாகப் பண்ணலாம். வாழ்வையும் சாவையும் சிறார் அறிந்துகொள்ளாது இருக்க முடியாது.

விளையாட்டாக இசை பாடிப்பழகுவது களிக்கூடம் ஒன்றில் முக்கியமான இடம் பெறவேண்டும். குழந்தைகள் அதில் குதூகலம் மிகப்பெறுகின்றனர். இசையானது உடல் உள்ளம் ஆகிய இரண்டுக்கும் நலனை வேண்டியவாறு

விளைவிக்கிறது. ஏதோ ஒருவிதப் பொழுதுபோக்குபோன்று அது வெளிக்குத் தென்படுகிறது. சிறார் ஒன்றுகூடி ஓது கின்றனர் அல்லது பாடுகின்றனர். இது அன்றாட நிகழ்ச்சி களில் ஒன்றாகும். முறைப்படி நடாத்துகிற சங்கீத வகுப்பு களில் தாளம் இசை ஆகியவைகளில் கருத்து மிகச் செலுத் தப்படுகிறது. குழந்தைகளுக்கு அப்படிப்பட்ட கட்டுமானம் ஏதும் இருக்கலாகாது. தாறுமாறாக வேண்டுமானாலும் குழந் தைகள் கத்தலாம். அப்போதைக்கப்போது அவர்களைத் திருத்தியமைத்தால் அது பாடம் புகட்டும் வகுப்பு ஆகிறது. தம்போக்கில் கூப்பாடு போடும்படி உற்சாகம் ஊட்டினால் அது விளையாட்டு ஆகிறது. ஓலமிட்டு விளையாடுதற்கிடை யில் அவர்கள் இசையில் ஊறி வளர்கின்றனர். விளையாட் டாகக் கற்கும் இசை வாழ்வுக்கு ஏற்ற ஆதரவு ஆகிறது.

விளையாட்டுக்கள் எல்லாவற்றிலும் கடவுள் வழிபாடு சம்பந்தமான விளையாடல் மிக முக்கியமானது. பெற்றோர் களும் ஏனைய முதியோர்களும் குழந்தைகளைக் கடவுள் வழி பாட்டுக்காகக் கோயிலுக்கு அழைத்துச் செல்வது சர்வசாதா ரணமானது. ஆங்குப் பெரியோர்கள் என்னசெய்கிறார்களோ அதைப் பார்த்துச் சிறியோர்களும் அங்ஙனமே செய்கின் றனர். வெறும் போதனை வாயிலாகவருகிற அறிவு, நல்ல பழக்கம் ஒன்றைப் பார்த்துப் பிடித்துக்கொள்வதற்கு நிகர் ஆகாது. ஆதலால் குழந்தைகளின் முன்னிலையில் பெரியோர்கள் நல்ல பழக்க வழக்கங்களில் ஈடுபடுவார்களா னால் அது அவர்களை நல்வழியில் நடாத்துதற்குப் பெரிதும் உதவுகிறது. கோவில் போன்று தென்படுகிற அமைப்பு ஒன்று களிக்கூடத்தில் இடம்பெறவேண்டும். தங்கள் மன துக்கு ஒத்தவாறு ஆங்கு வழிபாடுபண்ண அவர்களுக்கு ஊக்கம் ஊட்டவேண்டும். பூக்கொண்டு தெய்வ விக்கிர

கத்தை அலங்கரிப்பது, நைவேத்தியம் படைப்பது, பூஜை பண்ணுவது, பஜனை பாடுவது, தியானம் செய்வது முதலியன விளையாட்டாக நிகழ்தல் பிள்ளைகளுக்குப் பெருமகிழ்வை விளைவிக்கும். கோயிலில் நிகழ்கிற உற்சவம் போன்று தாங்களும் நடாத்த அவர்கள் விரும்புவார்கள். அதற்கு உற்சாகம் அளிப்பது அவசியம். உள்ளத்தில் நல்லியல்பை வளர்க்க இது பெரிதும் துணைபுரிகிறது. விளையாட்டாகத் துவங்குகிற வழிபாடு உண்மையான வழிபாடாக உருவெடுக்கிறது. கடவுள் பக்தி யூட்டுதற்குக் குழந்தைப் பருவம் சாலச் சிறந்தது. இளமையில் பெறுகிற இந்த வாய்ப்பு எக்காலத்துக்கும் இனிது உதவும். சமுதாயத்துக்கு இது சிறந்ததொரு வாய்ப்பு ஆகிறது. மானுட இயல்பை தெய்விக இயல்பாய் மாற்றுதற்குக் களிக்கூடம் சிறந்ததொரு இடமாகிறது.

## நிலைத்த நலன்

ஐந்து வயது பூர்த்தியாகும் வரையில் குழந்தைகளை ராஜா போன்றும் ராணி போன்றும் வைத்திருத்தல் வேண்டும். அவர்களுடைய இச்சா சுதந்தரத்துக்கு இடைஞ்சல் செய்யலாகாது. அவர்களுடைய ஆசைக்குத் தடைபோடலாகாது. ஏதேனும் ஒருவிதத்தில் அவர்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும். சின்னஞ்சிறு வயதில் உண்டாகிற விருப்பம் நிறைவேறாவிடில் அதனால் வருகிற மனக்குறை காலமெல்லாம் வருத்தத்தை விளைவிக்கும். மழலைப் பருவத்தில் முளைக்கிற மனக்குறை எளிதில் மறைந்து போகாது. ஏதேனும் ஒரு விதத்தில் அது மனதை வாட்டிக்கொண்டே இருக்கும். அதைத் தவிர்த்தல் பொருட்டுச் சிறார் கேட்பதையெல்லாம் கொடுக்கப் பெரியோர் கடமைப்பட்டிருக்கின்றனர். சிலவேளைகளில் அவர்கள் வேண்டுவதைக் கொடுக்கப்

பெற்றோர்க்கு இயலாது. வேறு சில வேளைகளில் சிறார் விரும்புவது தீமை விளைவிக்கக் கூடியவைகளாயிருக்கலாம். இப்படிப்பட்ட நெருக்கடிகளில் குழந்தைகளுக்கு மாற்றுப் பண்டங்களில் மையல் ஊட்டி அவர்களுடைய அவாவை நிறைவேற்ற வேண்டும். மாந்தர் கேட்பதையெல்லாம் கடவுள் கொடுப்பதில்லை. மைந்தர் கேட்பதை யெல்லாம் கொடுக்கப் பெற்றோர்க்கு இயலாது. அப்படியிருந்தும் தம் மைந்தருக்கு ஏமாற்றம் உண்டாகாதபடி பார்த்துக்கொள்வது அவர்களுடைய கடமையாகும். தாங்கள் விரும்புபவைகளை யெல்லாம் தங்கள் பெற்றோர்கள் தங்களுக்கு எடுத்து வழங்கு கிறார்கள் என்னும் திருப்தியும், அக மகிழ்வும் குழந்தைகளி டத்துத் ததும்பிக் கொண்டிருக்கவேண்டும். அவர்களை ராஜா போன்றும் ராணி போன்றும் வைத்துப் பேணவேண்டும் என்பதன் கோட்பாடு இதுவேயாம்.

பாலர்களுக்குப்பாலர்களைப்பற்றிய கதைகள்மிகப் பிடிக் கின்றன. பாலகணபதி, பாலமுருகன், பாலராமன், பால கிருஷ்ணன் ஆகியவர்களைப்பற்றி அவர்களுக்கு விளக்கிச் சொல்லுவது முற்றிலும் அவசியம். சொன்ன கதையைத் திரும்பச் சொல்லும்படி சிறுவர்களைத் தூண்ட வேண்டும். கதையை விளக்குகிற படங்களை அவர்களுக்குக் காட்டினால் மனதில் அவை நன்கு படியும். பால தெய்வங்களைப் பாலர் வணங்குவது இயல்பு. அதற்கு ஊக்கம் அளிக்கவேண்டும். அத்தெய்வங்களைப் பற்றித் திரும்பத் திரும்ப சிந்திப்பது உசிதம். அத்தெய்வங்களின் செயல்களைச் சிறுவர்கள் நாடக மாக நடிப்பார்களானால் உள்ளத்தில் அது ஆழ்ந்து வேர் பிடிக்கும். ஆயுள் முழுதுக்கும் அது நன்கு பயன்படும்.

எளிதில் விளங்கக்கூடிய பிரார்த்தனைகளைச் சிறுவர் களுக்குச் சொல்லித்தருதல் அ வ சி ய ம். மட்டமான

எண்ணங்கள் பிரார்த்தனையில் இடம் பெறலாகாது. தூய மேலான எண்ணங்களே உள்ளத்துக்கு நல்லுணவு ஆகின்றன. வணக்கமும், பிரார்த்தனையும் எளிய இசையோடு கூடியிருப்பது முற்றிலும் பொருந்தும்.

விளையாடல்கள் அனைத்தின் வாயிலாகக் குழந்தைகளுக்குப் பரஸ்பர உதவி புரிந்து கொள்கிற மனப்பான்மையை ஊட்டுவது உசிதம். நடக்க முடியாத ஒருவனை எப்படித் தூக்கிக்கொண்டு போவது என்பது விளையாட்டின் வாயிலாக வெளியாகிறது. பெரிய தின்பண்டம் ஒன்றை எறும்புகள் எப்படி ஒன்றுகூடிக் கடத்துகின்றன என்பதில் நல்ல பாடம் அமைந்திருக்கிறது. சிறுவர்களுக்கு அக்காட்சியைக் காண்பிப்பது அவசியம். சேர்ந்து செயல் புரிகிற பயிற்சி விளையாட்டாக அமைகிறது.

மூன்று வயது வரையில் குழந்தை தாயின் பராமரிப்பில் இருக்கிறது. பிறகு இரண்டு வருஷம் விளையாட்டாக நிறைவேறுகிறது. அதில் எத்தனை யெத்தனை பாடங்களோ விளையாட்டாகவே கற்றுக் கொள்ளப்படுகின்றன. இயல்புகளெல்லாம் நல்லியல்புகளாகத் திருந்தியமைகின்றன. விரைந்து வினையாற்றும் பயிற்சி தானாக வந்து அமைகிறது. பணிவிடை பண்ணும் பாங்கு தானாகவே வடிவெடுக்கிறது. ஒற்றுமையுணர்ச்சி எப்படி உருவாயிற்று என்பதைக் கண்டு பிடிக்க முடியாது. ஏனென்றால் பொருந்திய சூழ்நிலையே அதற்குக் காரணமாகிறது.

களிக்கூடத்தைப் பாடம் படிப்பதற்கும் எழுத்து எழுதுவதற்கும் பயன்படுத்தலாகாது. ஐந்து வயது பூர்த்தியாவதற்கு முன் எழுதவும் படிக்கவும் சிறுவன் ஒருவன் தூண்டப்படுவானாகில் அவனுடைய உடல் வளர்ச்சியும் அறிவு வளர்ச்சியும் நாளடைவில் குன்றிப்போம். பருவத்தே பயிர்

பண்ணுவது பயிர் பச்சைகளுக்கு மட்டும் உரியதன்று. பருவத்தே பாடம் பயிலுதலும் இக்கோட்பாட்டில் அடங்கியிருக்கிறது. எழுதப்படிக்கப் பயிலுதலில் ஐந்து வயதுக்குப் பிந்தலாம்; ஆனால் எக்காரணத்தை முன்னிட்டும் முந்தலாகாது. படம் வரைதல், களிமண்ணில் உருவம் அமைத்தல் களிக்கூடத்தில் இடம் பெறலாம். பாடம் படிப்பதும் எழுத்து எழுதுவதும் வயது ஐந்து பூர்த்தியானபின்னே ஆரம்பிக்கின்றன. இது களிக்கூடத்தின் அடிப்படைக் கோட்பாடு ஆகும். களிக்கூடத்தில் நல்ல விளையாட்டுப் பிள்ளையாயிருப்பவன் பிறகு சமுதாயத்தில் நல்ல குடிமகன் ஆவான்.

பொருள் பரிபூரண நிலையில் இருக்கும்போது அது கடவுள் எனப்படுகிறது. பூரணம் கலைந்து கீழ்நிலைக்கு இறங்கும்போது அது இயற்கை எனப்படுகிறது. இயற்கையில் உயிர் வகைகள் இடம் பெற்றிருக்கின்றன. பின்பு சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிப்பது இயற்கையின் திட்டம். உடல் அமைப்பில் உச்சநிலையை எட்டியிருக்கும் உயிர் மனிதன் எனப்படுகிறான். உள்ளத்தில் பிறகு அவன் உச்சநிலையடையும்போது பழையபடி பூரணத்தை எட்டிப் பிடித்துக் கடவுளில் ஒன்றுபடுகிறான். இது மானுடப் பிறப்பின் சிறப்பு ஆகும். மானுடச்சிசுவின் உடலையும் உள்ளத்தையும் பண்படுத்த உதவுவது களிக்கூடம் எனப்பெயர் பெறுகிறது. களிக்கூடத்தை நடமாடும் தெய்வங்களின் கொலுமண்டபம் என்று மொழிவதும் பொருந்தும்.

---

# முது மொழிகள்



குழந்தையும் தெய்வமும் கொண்டாடிய இடத்தில் உள.

*  *  *  *

குழந்தையின் முன்னிலையில் முதியவன் குழந்தையாக மாறிவிடுகிறான்.

*  *  *  *

சான்றோர் இணக்கம் வாய்க்காத விடத்து குழந்தைகளோடு இணக்கம் கொள்.

*  *  *  *

அகங்கார மமகாரமற்ற தூயநிலையைக் குழந்தையினிடத்துக் காணலாம்.

*  *  *  *

ஜீவன் முக்தனை அறிவு நிறைந்த குழந்தை யெனலாம்.



# கிணற்றுத் தவளை

கடல் தவளை ஒன்று ஒருநாள் ஒரு கிணற்றுக்கு வந்துசேர்ந்தது. 'நீ எங்கிருந்து வருகிறாய், அப்பா?' என்றது அக்கிணற்றில் வசித்திருந்த தவளை. 'நான் கடலிலிருந்து வருகிறேன்' என்ற விடை வந்தது. 'கடலா! கடல் என்றால் என்ன?' என்று மேலும் கிணற்றுத்தவளை கேட்டது. 'அது, இது போன்ற நீர் நிலை. ஆனால் அது எல்லையில் அடங்காதது' என்று புதியதாக வந்த பிராணி பகர்ந்தது. 'அப்படியானால் அது இவ்வளவு பெரியதாக இருக்குமா?' என்று கேட்டுக்கொண்டு கிணற்றுத் தவளை ஒரு குதி குதித்தது. 'இல்லை, அதை நம்போன்றவர்கள் அளக்கமுடியாது' என்று கடல் தவளை சொல்லிற்று. 'என்ன, அது இவ்வளவு பெரியதாக இருக்குமா?' என்று மூன்றடி தூரம் மேலும் குதித்து கிணற்றுத் தவளை வினவிற்று. 'உன் கிணறு போன்று பல கோடி கிணறுகள் சேர்ந்தாலும் கடலுக்கு நிகராக மாட்டா. அதன் விரிவு உன் அறிவுக்கு எட்டாதது' என்று மேலும் கடல் தவளை மொழிந்தது. இதைக் கேட்டதும் கிணற்றுத் தவளைக்கு கோபம் மூண்டு விட்டது. 'மடையன், முட்டாள், உனக்கு ஒன்றும் விஷயம் தெரியாது பிதற்றுகிறாய்; ஓடிப்போ' என்றது கிணற்றிலே பிறந்து கிணற்றிலே வாழ்ந்து வந்த தவளை. மதவாதிகள் போக்கும் இத்தகையதே. ஒவ்வொரு மதவாதியும் தன் மதத்திற்கு நிகரானது உலகில் வேறு ஒன்றும் இல்லை என்று இறுமாப்பு எய்துகிறான். கடவுள் கணக்கற்ற மதங்களை அமைத்துள்ளார் என்பதை அவன் அறிந்துகொள்வதில்லை.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தினின்று வெளிவரும்

# தர்ம சக்கரம்

திங்கள் வெளியீடு

இது இந்தியாவின் பண்பைப் போதிக்கிறது. பாரமார்த்திகத்தைப் பரப்புகிறது. சமயக் கொள்கைகளை விளக்குகிறது. சமயத்தில் புகுந்துள்ள கசடுகளை அகற்றுகிறது. பைந்தமிழைப் பேணுகிறது.

அறிவு வளர்ச்சிக்கு—ஆத்மீக முன்னேற்றத்திற்கு—இல்லற வாழ்விற்கு இணையற்ற பொக்கிஷம். பல அனுபவ ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஆன்றோர் அறிவுரைகள் அனைத்தும் தாங்கி 1952 ஜனவரி முதல் வெளிவந்து கொண்டிருக்கிறது. விவரங்களுக்கு எழுதித் தெரிந்து கொள்ளுங்கள்.

திருப்பராய்த்துறை—639115
திருச்சி ஜில்லா

காரியதரிசி
தர்ம சக்கரம்

---

# சிவ தத்துவம்

பார்வதி சமேதராகிய பரமசிவனது விநோதமான குடும்பத்தின் தத்துவம். அவர் குடும்பத்தினரின் வாகனங்களின் விளக்கம் இதில் கூறப்படுகிறது.

திரிலோகக் குடும்பி, சிவசக்தி, அர்த்தநாரீசுவரன், அவர் இரந்து உண்பதின் பொருள், தியாகராஜன், ஆனந்தத் தாண்டவம், தக்ஷிணாமூர்த்தி என்பனபோன்ற சிவ சொரூபத்தின் பல அம்சங்களை விளக்குகிறது இந்நூல்.



விலை 70 பைசா

